9th November 1961]

DEPUTY SPEAKER : A similar question put by hon. Member Sri V. K. Ramaswamy Mudaliyar has already been answered by the Hon. Minister.

**Sri V. K. KOTHANDARAMAN :** விநியோகத்தில் ஏற்படக் கூடிய ஊழலின் காரணமாகத்தான் ஏற்கனவே சல்பேட் போன்ற உரங்களைக்கூடத் தனியாரிடத்தில் இருந்து எடுத்து கூட்டுறவுகளுக்கும், பஞ்சாயத்து போர்டுகளுக்கும் கொடுத்திருக் கிறோம். அப்படியே இந்தச் சிமெண்டு விநியோகத்தையும்கூடத் தனியாரிடத்தில் இருந்து எடுத்து கூட்டுறவு சங்கங்கள் மூலமாக விநியோகம் செய்ய ஏற்பாடு செய்யப்படுமா ?

**The Hon. Sri P. KAKKAN :** அரசாங்கம் நன்கு பரிசீலனை செய்துதான் இந்த முடிவுக்கு வந்திருக்கிறது. கூட்டுறவு சொஸைடிகளிடத்திலோ, பஞ்சாயத்து போர்டுகளிடத்திலோ கொடுக்கிற தகவல் என்னிடத்தில் இல்லை.

**Sri R. SRINIVASA IYER :** இப்போது 20 சதவிகிதம் என்று தனியார் டெப்போக்களுக்குக் கொடுக்கிற முறையில் இன்றைக்கு மூட்டை 12 ரூபாய் 15 ரூபாய் என்று விற்கக்கூடிய நிலைமை இருக்கிறது. ஆகவே, இப்படி கள்ளமார்க்கெட் ஆகாமல் தடுக்க ஒரு ஊருக்கே இரண்டு மூன்று ஏஜெண்டுகளுக்கு லைசென்சு கொடுக்க முயற்சி எடுக்கப்படுமா ?

**The Hon. Sri P. KAKKAN :** இதுபற்றித் தனியாகக் கேள்வி போட்டால் பரிசீலனை செய்யப்படும்.

*Sweepers and scavengers*

* 1917 Q.—Sri V. K. KOTHANDARAMAN (on behalf of Sri M. KALYANASUNDARAM) : Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) that details of Centrally-sponsored schemes to be implemented during the current year for improving the working conditions of sweepers and scavengers; and

(*b*) the list of municipalities to be benefited?

The Hon. Sri P. KAKKAN : (*a*) & (*b*) A paper[a] is placed on the table of the House.

***Highways and Rural Works Department***

* 1918 Q.—Sri V. K. KOTHANDARAMAN : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

வேதாரண்யத்தில் மராமத்து இலாகா (**Highways**)-ல் மேஸ்திரி **or Attender**-ஆக வேலை செய்யும் ஒருவர் சென்ற 6 வருட காலமாக வேலை செய்யாமலேயே சம்பளம் வாங்கி வருவது உண்மையா ?

The Hon. Sri P. KAKKAN : No, Sir.

a Printed as Appendix I on page 107 infra.